

15

# பொறுப்பு

முதல் வேலையே பங்க்சர் ஒட்டுவதாக வந்தது. பொன்னன், "கொஞ்சம் இரு தம்பி, அந்தக் கடை திறக்கட்டும்" என்றான்.

"அதுதான் உங்க கடையா?" என்று அந்தப் பையன் கேட்டான்.

பொன்னன் அந்தக் கேள்வி காதில் விழாதது போல இருந்தான்.

"ரொம்ப லேட்டாகுமா?" என்று பையன் கேள்வியை மாற்றிக் கேட்டான்.

"கொஞ்ச நேரந்தான் இருந்து பாரேன். பம்பு, ஸ்பானர் எல்லாம் அந்தக் கடையிலதான் வச்சிருக்கேன். கடை திறந்தவுடனே பங்க்சர் ஒட்டி முதல்லே உன்னை அனுப்பிடறேன்."

"அப்போ அது உங்க கடை இல்லையா?"

"பத்தாயிரம் ரூபா இருந்தா அந்த மாதிரிக் கடையைப் பிடிக்கலாம். கொடுக்கறியா?"

பையன் என்ன செய்வது என்று தெரியாமல் பேசாமல் நின்றான். ஆனால் அவன் செய்யக்கூடியது ஒன்று இருந்தது. ஒரு நிமிடத் தாமதத்திற்குப் பிறகு அவன் கொண்டு வந்திருந்த சைக்கிளைத் தள்ளிக்கொண்டு வேறு சைக்கிள் ரிப்பேர்க் காரனைத் தேடிச் சென்றுவிட்டான்.

கடை என்றில்லாமல் தெருவோர நிழலில் தொழில் நடத்தும்போதுகூட வாடிக்கையாளர்கள் ஏற்பட்டு விடுகிறார்கள். அப்படி ஒரு வாடிக்கையாளரின் மகனாகத்தான் இந்தப் பையன் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் 'பொன்னன்' என்று விசாரித்துக்கொண்டு இங்கு வந்து நிற்க மாட்டான்.

பொன்னன் தெருவோரமாக நிழலாக இருந்த இடத்தில் முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து கொண்டான்.

காலையில் இப்படி உட்கார்ந்து விடுவது அவனுக்குச் சற்றும் பிடிக்காத ஒன்று. மளிகைக் கடை, வெற்றிலை பாக்குக் கடை, காய்கறிக் கடை வேண்டுமானால் அதிகாலையில் திறப்பார்கள். சிங்கப்பெருமாள் கோயிலில் இருக்கும் நிலத்தைச் சென்னையில் பங்கு போட்டு விற்கும் தரகர்கள் கடை காலையிலேயே திறக்க வேண்டிய நிர்ப்பந்தம் என்ன? அவர்கள் ஒன்பது, பத்து மணிக்குக் கூடத் திறப்பார்கள். அவர்கள் கடையில் தன் தொழில் கருவிகளை வைத்தால் அவனும் அவர்களோடுதான் நாளைத் துவக்க வேண்டும். அதற்குள் அந்தப் பையன் போல இன்னும் பலரும் வேறு சைக்கிள் ரிப்பேர்க்காரனைத் தேடிப் போய் விடுவார்கள்.

ஆனால் போன பையன் மறுபடியும் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு பொன்னனிடம் வந்தான்.

"என்ன?" என்று பொன்னன் கேட்டான்.

"இன்னும் ஒரு கடையும் திறக்கலை."

"பக்கத்துத் தெரு நாயக்கர் கடைக்குப் போனியா?"

"எது? பால் பங்க் பக்கத்திலே இருக்கிறதா?"

"பால் பங்க் எதுத்த கடை."

"அதுவும் மூடியிருக்கு."

பொன்னன் எழுந்திருந்து சைக்கிளைத் தன் கையில் எடுத்துக் கொண்டான். பழைய சைக்கிள்தான். ஆனால் குழந்தை போலக் கவனிப்புப் பெற்றிருந்தபடியால் ஒரு மினுமினுப்புக் கொண்டிருந்தது. சைக்கிளை இவ்வளவு அக்கறையுடன் பார்த்துக் கொள்கிறவர்கள் ரிப்பேர்க்காரர்கள் மீது அதிக நம்பிக்கை வைக்க மாட்டார்கள். ரிப்பேர்க்காரர்கள் எல்லாருமே முரட்டுத்தனமாகச் சுத்தியை உபயோகப்படுத்தியே சைக்கிளின் மொத்த வலுவைக் குலைத்து விடுவார்கள் என்பது அவர்களுடைய பயம். இப்போது ஒரு சிறு பையனிடம் சைக்கிளைக் கொடுத்தனுப்பியது, வேறு வழியில்லை என்ற நிலைமையில் இருக்க வேண்டும்.

முன் சக்கரந்தான் காற்றிழந்து கிடந்தது. பொன்னன் வால்வ் டியூபைக் கழட்டிப் பார்த்தான். அதில் குறையில்லை. நிச்சயம் பங்க்சர்தான்.

பொன்னன் ஸ்டாண்டு போட்டு சைக்கிளை ஓரமாக நிறுத்தி வைத்தான். டயரைக் கழட்டுவதற்கு உறுதியான கம்பி போல ஏதாவது ஒன்று கிடைத்தால் வேலையைத் துவக்கலாம். அப்போது

சுப்பிரமணியன் அப்பக்கம் வருவதைப் பார்த்தான். பொன்னனுக்குச் சிறிது வியப்பாக இருந்தது. "இன்னிக்கு ஸ்கூல் டிரிப்புக்குப் போகலே?" என்று சுப்பிரமணியனைக் கேட்டான்.

சுப்பிரமணியன் பிரேக் பிடித்திழுத்து ரிக்ஷாவை நிறுத்தினான். "இன்னிக்கு ஸ்கூல் லீவு" என்றான். அப்புறம், "பம்பு எங்கே?" என்று கேட்டான்.

"அதுக்குத்தான் காத்திட்டிருக்கேன். இந்த புரோக்கர் காரங்க இன்னும் கடையைத் திறக்கலே."

"பம்பையாவது நீ கையோடு எடுத்திட்டுப் போய்க் கொண்டு வரலாமில்லே?"

"செய்யலாந்தான்..."

சுப்பிரமணியன் கீழேயிறங்கி, பையன் கொண்டு வந்திருந்த சைக்கிளின் சீட்டில் முழங்கையை வைத்து ஊன்றிச் சாய்ந்து கொண்டான். பையனின் முகத்தில் அநீதி இழைக்கப்பட்டவன் பாவனை தெரிந்தது. அநீதியை அதிகப்படுத்துவது போலச் சுப்பிரமணியன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு பீடியை எடுத்து வாயில் வைத்துக் கொண்டான். "வத்திப் பொட்டி இருக்கா?" என்று பொன்னனைக் கேட்டான்.

"இல்லை" என்று பொன்னன் சொன்னான்.

சுப்பிரமணியன் ஏமாற்றமடைந்தவன் போலக் காணப்படவில்லை. பற்ற வைக்காத பீடியை வாயில் வைத்தபடியே, "அந்த சிவந்த பையன் நேத்து மறுபடியும் நம்ப வண்டிய ஃபாலோ பண்ணிட்டு வந்தான்" என்று பொன்னனிடம் சொன்னான்.

"மடக்கினயா!"

"பின்னே? ராமலிங்கம் கிட்டேயும் சொல்லி வச்சிருந்தேன். ஸ்கூல் டிரிப்பை முடிச்சப்புறம் அந்த மைதானத்துக்கிட்டே அப்படியே ஓரங்கட்டிட்டோம்."

"இந்தத் தெரு முனையிலியே என்னமா ஸ்டைல் காட்டிட்டி இருந்தான். அவுங்க அப்பா எல்லாம் ரொம்ப மரியாதைப் பட்டவரு."

"நான் கூட முதல்ல கவனிக்கலை, பொன்னா. ஆனா அந்தப் பொண்ணுதான் சொல்லிச்சு— அண்ணா, அண்ணா, இந்த ஆளு தினமுமே தொந்தரவு பண்ணறான்னு. அப்புறம் பார்த்தா ஸ்கூல்

முடிச்சு அந்தப் பொண்ணு நம்ம வண்டியிலே வரப்பவும் இவன் தவறாகத் தெரியறான். பின்னாலியே வந்து ச்சுச்சுன்னு ஊதறாரு, பெரிய மைனர்."

"இங்கே ஒரு வயசான அம்மா கைக்குடையாலியே நாலு போட்டா அவன் மூஞ்சியிலே. கொஞ்ச நாள் கண்ணிலே படாம இருந்தான். இப்போ மறுபடியும் வந்துட்டான்."

"ராமமூர்த்தி தெருகிட்டே போயிட்டிருந்தான், நான் ராம லிங்கத்துக்கு சிக்னல் கொடுத்துட்டுப் பின்னாலேயே போனேன். மைதானம் கிட்டே போறப்போ ஒரேயடியா லெஃப்ட்லே ஒடிச்சேன். பேபேபேன்னு ரோட்டோரமாப் போய் விழுந்தான். ராமலிங்கம் அவன் வண்டியை இன்னொரு பக்கமா ஒடிச்சு அவன் ஓடிப் போகாமக் குறுக்கே நின்னான். எழுந்தவுடனே சட்டையைப் பிடிச்சு ஒரு முறுக்கு முறுக்கினான். "ஏண்டா முக்கால் டிக்கட்டு! நான் ஸ்கூல் இட்டுட்டுப் போற குழந்தையை யாடா டாவடிக்கறே'ன்னு ஒரு உலுக்கு உலுக்கினேன். பையன் அலற ஆரம்பிச்சுட்டான்...

சைக்கிளில் பங்க்சர் போட வந்த பையனிடம் பொன்னன் சொன்னான். "ஏதாவது வேலை இருந்தாப் போயிட்டு வா தம்பி. அந்தக் கடை திறந்தவுடனே போட்டு வெச்சிடறேன்."

"ரொம்ப லேட்டாகுமா?"

"எப்படியும் ஒம்பது மணியாகும்."

"சரியா ஒம்பதுக்குக் கிடைக்குமா?"

"சரியான்னா, நான் என்ன காரண்டியா தர முடியும்? எப்படியும் ஒரு கால் அவரு முன்னே பின்னே ஆகத்தான் ஆகும். இல்லேன்னா வண்டியை எடுத்துப் போய் வேறெங்கேயாவது பாத்துக்க."

பையன் தயங்கினான். பிறகு "இங்கேயே இருக்கேன்" என்றான்.

பொன்னன், சுப்பிரமணியன் பக்கம் திரும்பினான். தெருவில் போகும் யாரிடமோ நெருப்புப் பெட்டி வாங்கி அவன் பீடியைக் கொளுத்திக் கொண்டிருந்தான்.

பொன்னன் சுப்பிரமணியன் ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்து கொண்டான். சுப்பிரமணியன் கேட்டான், "டீ குடிக்கிறியா?"

"வேண்டாம், மணி. இன்னும் ஒரு போணி கூட ஆகாமப் போக மனசில்லை."

"எனக்கு இன்னிக்கு எது போணி தெரியுமா? பொணம்."

பொன்னன் தடாலென்று கீழே இறங்கினான். சுப்பிரமணியன் சொன்னான். "அவுங்களுக்கே தெரியாதுப்பா. ஒரு பொண்ணுக்குக் குளிக்கிற ரூம்லே எப்படியோ ஷாக் அடிச்சிடுச்சு. அவுங்க அப்படியே ஈரத் துணியோட டாக்டர் கிட்டே தூக்கிப் போனாங்க. டாக்டர் சொன்னப்புறம்தான் அவுங்களுக்கே புரிஞ்சுது பொண்ணு போயிடுச்சுன்னு."

சுப்பிரமணியன் ஒரு நிமிடம் இடைவெளிக்குப் பிறகு மீண்டும் பேசினான். "நான் அவுங்களைத் திரும்பவும் வீட்டிலே கொண்டு போய் விட்டுட்டேன். அதுவே ஸ்கூலுக்கு போற பொண்ணுதான்."

"சரியானபடி ஷாக் வாங்கினா யாரு பொழைக்க முடியும்? என் தம்பி ஒரு நிமிஷத்திலே போயிட்டானே?"

"அந்தப் பொண்ணுக்கும் அப்படித்தான் ஆயிருக்கணும். இதிலே வயித்தெரிச்சல் தெரியுமா? அந்தப் பெண்ணோட அப்பா அம்மா அது செத்ததுன்னு தெரியாம அப்படியே மேலே சாச்சுட்டுக் கொண்டு வராங்க. அந்தப் பொண்ணைப் பாத்துட்டு ஒருத்தன் பின்னாலே வராம்ப்பா."

பொன்னன் காரித்துப்பினான்.

சுப்பிரமணியன் சொன்னான், "இந்த டாவடிக்கிற மொட்டைப் பசங்களைக் கூறு போட்டுக் கடாசிடணும்னு கோபம் வரது, பொன்னா. அக்கா தங்கச்சியோட பொறக்கலை? நாய் மாதிரி ரிக்ஷா பின்னாலே வந்துடறாங்க. அந்தந்த வீட்டிலே என்னை நம்பி அவுங்க பொண்ணை வண்டியிலே அனுப்பறாங்க. அந்தப் பொண்ணுகிட்டே ஒருத்தன் கேவலமா நடந்தா மனசு பொறுக்கறதில்லே."

"ஏதோ நம்ப சொல்றோம். நீ இங்கே பட்டணத்திலே பாரு. ஒவ்வொரு பொம்பளைப் பசங்க ஸ்கூல் முன்னாலியும் எப்பவும் பத்து அவதாரங்க நின்னுட்டேதான் இருக்கு."

"ஒதிக்கணும், பொன்னா. இரண்டு பேரைப் பிடிச்சு ஒதைச்சா ஆறு மாசத்துக்கு கிட்டே வரமாட்டாங்க. அவங்களுக்குத் தெரியற பாஷை அதுதான்."

பங்க்சர் சைக்கிள் பையன் மீண்டும் கிளம்பப் பார்த்தான். இம்முறை பொன்னன் அவனைத் தடுக்கவில்லை. ஆனால் சுப்பிரமணியன் கேட்டான். "என்ன அவசரம்? இன்னிக்கு ஸ்கூல் லீவுதானே?"

பையன் தயங்கி நின்றான். பொன்னன் சொன்னான். "ஸ்கூல் லீவாயிருந்தா ஆபீஸ் எல்லாம் இருக்குமே?"

எல்லாருடைய சங்கடத்தையும் தீர்த்து விடும் விதத்தில் அந்த ரியல் எஸ்டேட் கடையைத் திறக்க இருவர் வந்துவிட்டார்கள். பொன்னன் பம்பை எடுத்து வந்து சுப்பிரமணியன் வண்டிக்குக் காற்று அடிக்க வந்தான். சுப்பிரமணியன் பம்பைத் தான் வாங்கிக் கொண்டு, "நீ அந்தப் பையன் சைக்கிளைக் கவனி" என்றான்.

"நீ பம்பை முதல்லே கொடு."

சுப்பிரமணியன் ரிக்ஷாவுக்குக் காற்று அடித்துக் கொண்டே சொன்னான். "டாவடிக்க வேண்டியதுதான். ஆனால் அதுக்கும் வயசு வேண்டாம்? மீசை கூட முளைக்காதப்போ சிகரெட் ஊதிட்டு, பொட்டைப் பசங்க ஸ்கூல் முன்னாலே திரிய றாங்களே, ஒவ்வொருத்தன் முட்டியையும் பேத்துடணும்."

"பேத்துடலாம். நீ பம்பைக் கொடு."

1983